உ

முருகன் துணை.

# ஸ்ரீ ல ஸ்ரீ அழகுமுத்துப் புலவர்

திருவாய்மலர்ந்தருளிய

ஸ்ரீ மெய்கண்ட

# வேலாயுதசதகம்.

# திறப்புகழ்.



இவை

நாகை நீலலோசனிப் பத்திராதிபரும்

நாகபட்டினம் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமாகிய

**ஜி. சதாசிவம்பிள்ளை அவர்களால்**

பரிசோதிக்கப்பெற்று

அவர்களது மாணாக்கரிலொருவராகிய

**A. G. குமாரசாமி அவர்கள்**

பொருளுதவிகொண்டு

நாகபட்டணம்

நீலலோசனி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

இரண்டாம் பதிப்பு காப்பி 1000

இதன் விலை அணா 4.

1915

உ

முருகன் றுணை.

# இரண்டாம் பதிப்பின் முகவுரை.

---

அருணையம்பதியிலவதரித்த ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ்த்தோத்திரங்கள் ஸ்ரீகுமா ரக்கடவுளுக்கு எவ்வாறு இனிய தோத்திரங்களாயிரு க்கின்றனவோ அவ்வாறே **இவ்வழகுமுத்துப் புலவர்** அருளிச்செய்த இந்த "வேலாயுதசதகம்" "திறப் புகழ்" ஆகிய நூற்களிலுள்ள தோத்திரங்களும் அக் குமாரக்கடவுளுக்கு இனியனவாயிருக்குமென்பது அவ ற்றைப் படிக்கும் நல்லோர் பலருக்கும் இனிது விளங் கும். இப்புலவருடைய திருப்பாடல்கள் அதிமதுரமும் அற்புதமுமா யிருக்கின்றன பொருளமைதியிலும் மிகச்சிறந்தன. இவற்றை நோக்கியே இற்றைக்குப் பதினைன்காண்டிற்குமுன்னர் இவ்விரண்டு நூற்களையும் ஒருங்கே அச்சியற்றி வெளிப்படுத்தினோம்.

இந்நூற்களைப் படித்த பக்திமான்கள் பலரும் பற்பல இடங்களிலிருந்து புத்தகம் வேண்டுமென்றெ ழுதியனுப்பியும் பிரதிகள் கைவசமில்லாததால் அவர் கள் அவாவைப் பூர்த்திசெய்ய முடியவில்லை.

இவ்விஷயத்தை ஆசிரியர் அழகுமுத்துப்புலவர் திருமரபினரும் எனது அருமைமாணாக்கரும் "**ஸ்ரீஅம் பலவாணதேசிகபுத்தகசாலைக்**" காரியதரிசியும் "**நாகை சன்மார்க்க சங்கத்தின்** உபஅக்கிராசனாதிபதியுமாகிய ஸ்ரீ A. பெ. குமாரசாமிச் செட்டியாரிடம் தெரிவி க்கவே இவ்விரண்டாம்பதிப்பு அச்சியற்றத் தூண்டி யியற்றுவித்தார். இப்புலவர் பெருமானின் சரிதமும் இவர் திருவாய்மலர்ந்தருளிய "**ஸ்ரீ மெய்கண்டவேலா யுதவுலா**" "**ஸ்ரீ காயாரோகணக் குறவஞ்சி**" என்னும் இர

ண்டுபிரபந்தங்களும் ஸ்ரீ A.G. குமாரசாமி அவர்களின் பெருமுயற்சியின் பயனைக் கிடைத்துள்ளன. சரித்திரம் இத்துடனச்சிடப்பட்டுள்ளது மற்ற இரண்டு நூற்களும் கூடிய சீக்கிரம் வெளிவரும்.

இதற்காகும் பொருட்செலவுமுழுதும் இவருடையதே. இவருடைய விடாமுயற்சியையும் பக்தி சிரத்தையையும் பற்றியாம் பெரிதும் மகிழ்ச்சியடைகின்றோம். இவர் இதுபோன்ற சற்கருமங்களை மனமொழி மெய்களால் தினந்தோறும் செய்துகொண்டு சுகஜீவியாய் வாழ்ந்துவரத் திருவருள்புரியும்படி கலியுகவரதராகிய ஸ்ரீ மெய்கண்ட வேலாயுதக்கடவுளின் திவ்ய திருவடிகளை மனமொழி மெய்களால் தினந்தோறும் வழுத்துகின்றோம்.

நாகப்பட்டினம், 1—6—15.

ஜி. சதாசிவம் பிள்ளை
நாகை "நீலலோசனி" பத்திராதிபர்

ஸ்ரீ மெய்கண்டவேலவர் திருவடிவாழ்க! சுபம்.

முருகன் றுணை.

# ஸ்ரீ அழகுமுத்துப் புலவர்

## சரித்திரம்.



(இந்த இப்புலவர் பெருமானின் தமையன் சந்ததியில் வந்தவரான ஸ்ரீ அண்ணாமலைச்செட்டியார் என்பார் எழுதி வைத்திருந்த குறிப்பிலிருந்து ஸ்ரீ A. G. குமாரசாமி அவர்கள் எழுதித்தந்தபடி அச்சிடப்பட்டிருக்கிறது.)

நம் பரதகண்டத்தின் பூங்காவன மென்றழைக்கப்படும் இச் சோழதேசத்தில் மகா மகிமைகளை யுடையதும் சமயாசாரியர்களால் பாடல் பெற்றதுமான சிவராஜதானி க்ஷேத்திரமெனப்படும் நாகையம்பதியே இப் புண்ணிய புருஷரின் அவதார க்ஷேத்திரமாகும்.

இங்குள்ள ஸ்ரீ நீலாயதாக்ஷியம்மன் கோவில் வடக்குவீதியில் சேனைத்தலைவர் மரபில் இற்றைக்கு நூற்றெண்பது வருடங்களுக்குமுன் ஸ்ரீமான் அம்பலவாணசெட்டியாரும் அவரது பத்தினியார் ஸ்ரீமாது சிவகாமசுந்தரி அம்மையாரும் செய்த நற்றவப்பயனால் வைகாசிமாதம் விசாக நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் திருவவதாரம் செய்தார்.

இவருக்கு மூன்று சகோதிரர்களும் ஒரு சகோதிரியும் உண்டு. இங்குள்ள ஸ்ரீ குமரகோவில் என்னும் ஸ்ரீ மெய்கண்ட வேலாயுதாலயத்தில் ஸ்தானீகராயிருந்துவந்த இவரது தந்தையார் இவருக்குப் பூர்வகர்மரோகமேதோ இருந்தமைகொண்டோ அல்லது வேறு எக்காரணம்பற்றியோ இவருக்கு இளமையிற் கல்வி பயிற்றுவிக்காதுவிட்டு விட்டனர். எனினும் இவர் பதினாறு வயதளவிலேயே நன்னடையுடன் ஸ்ரீ குமாரக்கடவுளிடம் அன்புகொண்டு சடாக்ஷரமௌனியாய் தந்தையார் பணியைத் தலைமேற்கொண்டு தம்காலத்தின் பெரும்பாகத்தை ஸ்ரீ சண்முகப்பெருமான் சந்நிதியிலேயே கழித்துவந்தனர். இரண்டு வருஷங்களின்பின் இவரது தந்தையார் காலஞ்சென்று விட்டனர். உடனே அவர் பணியை அக்காலத்து அக்

கோவிலின் தர்மகர்த்தாயிருந்தவர் விரும்பியபடி தந்தை யார் உத்தியோகத்தைத்தாமே நிர்வகித்து வந்தனர். இவரிடத்தில் சிற்சில சமயங்களிற் கண்ட தெய்வீகத்தன்மையால் பலர் இவர் பால் அன்பும் ஆதரவுங்கொண்டிருந்தனர். இவர் இரவில் ஸ்ரீ குமாரக்கடவுளின் நைவேத்தியமன்றி வேறெதையு முண்ணும் வழக்கங்கொண்டவரல்லர். இவ்வாறு நிகழ்ந்து வருங்கால் ஓர்நாள் பணியின் மிகுதியால் களைப்புற்று ஆலயத்திலுள்ள வாகனங்களினிடைவெளியில் அயர்ந்து நித்திரைபோவாராயினர். அர்த்தசாமமுடிந்தபின்னர் இவரைக்குருக்கள் முதலாயினர் பன்முறை விளித்தும் வாராமையால் ஆலயத்திற்குள் நித்திரைபோவதை அறியாது குருக்கள் முதலியோர் ஆலயத்தைத்திருக்காப்பிட்டுத் தத்தமிருப்பிடம் போயினர். பிறகு நடுச்சாமத்தில் இவர் நித்திரையினின் றெழுந்து கதவுகள் திருக்காப்பிட்டிருக்கக் கண்டார். பசிநோய் தம்மை அளவு கடந்து வருத்துவதைக் குறித்து சண்முகப்பெருமான் சந்நிதியில் முறையிட்டு அங்கேயே திரும்பவும் படுத்துறங்குவாராயினர். இப்பக்தரின் பசியையாற்றத் திருவுளங்கொண்ட வேலாயுதக்கடவுள் அவருக்குவழக்கமாய் அன்னங்கொடுத்துவரும் தங்கோயிற் பிராமணப்பிள்ளை வடிவங்கொண்டெழுந்தருளி இவர் முன்தோன்றி "என்ன! அழகுமுத்து" எனலும் இவர் தாம் நித்திரைபோன விஷயத்தைச்சொல்லிப் பசி நோய் தன்னை அளவுகடந்து வருத்துவதால் உடனே அன்னங்கொடுக்க வேண்டுமென்று விண்ணப்பித்தார்.

உடனே ஐயராய்வந்த மெய்யர் திவ்யப்ரசாதமும், தீர்த்தமும், கொடுத்தருள அதனையுண்டு தம்பசிநோயோடு நீளத்திருந்து மாளாத்துயர்தந்துவந்த பூர்வகர்மநோயும் நீங்கப்பெற்றுக்களை தீர்ந்து திவ்யதேஜோமயமாய்க்களிப்புற்றிருந்தார் அப்பொழுது ஐயர் 'ஏ! அழகுமுத்து ஏதாவது பாட்டுப்பாடுவாயாக" வென்றருளினார் "ஐய! கல்வி மணம் வீசப்பெறாத தமியேன் எவரைக்குறித்து எவ்வாறு பாடவல்லேன்" என உடனே ஸ்ரீ சண்முகப்பெருமான் ஆறுமுகங்களும் பன்னிருகரங்களும் தோன்றமயில்வாகனரூடராய்க் காக்ஷி கொடுத்து நான்தான் மெய்கண்டவேலவன் என்னையே துதித்துப் பாடுவாயாக என்று வரந்தந்தருளி மறைந்தனர். அந்நிமிஷமே கவிபாடும் சக்தி உண்டாகி கடல்மடை திறந்தாற்போல் மெய்கண்ட "வேலாயுதசதகம்" என்னும் நூலைநூறு செய்யுட்களாற்பாடிமுடித்

தனர். மறுநாட்காலையில் கோவிற்கதவு திறக்கப்பட்டவுடன் காளமேகம்பொழிவதை யொப்பசந்தவேள் சந்நிதியில் சந்தக்கவி பாடிக்கொண்டிருக்கும் இவரைக்கண்டு அதிசயித்தார்கள்.

ஐயனை தருளைப்பெற்றார்க் கதிசய மிதன்சொல் மூன்று
வையமுந் தொழிலுஞ் செய்ய வல்லவ ரவரேயன்றோ.

என்றபடி அழகுமுத்து என்ற இயற்பெயர் காரணப் பெயராகும்படி நேற்றுவரையிருந்த கடியகல்லாமையும் கொடியவியாதியும் நீங்கப்பெற்று அதிசுந்தரரூபராய் கவி மாரிபொழியும் அதிசயத்தைக்கண்டு பொய்கண்டார் பாலனுகாத மெய்கண்ட வேலவரின் திருவருட்டிறத்தையும் இப்புண்ணிசீலரின் உயர்நிலைப் பக்தியின் திறத்தையும் பற்றியாவரும் கொண்டாடினேர்கள். அன்று முதல் அழகுமுத்து என்பதனேடு புலவர் என்பதையுங் கூட்டி அழகுமுத்துப் புலவர் என்று யாவரும் வழங்கிவந்தனர். அதன் பிறகு "திருப்புகழ்" "மெய்கண்ட வேலாயுத வுலா" என்னும் பிரபந்தங்களை சுப்ரமணியக்கடவுள் பேரிலும், சாயாவனசுவாமி பேரில் சாயாவன குறவஞ்சி என்ற பிரபந்தத்தையும் பாடிமுடித்துத் திருவருட்செல்வராய் காலங்கழித்து வந்தனர்.

இவ்வாறு குமாரக்கடவுளின் அநுக்கிரகத்தைப் பெற்ற நாள்முதல் ஞானப்பியாசமுதிர்ந்து நைஷ்டிகப் பிரமச்சாரியாகவிருந்த இம்மகானுபாவர் க்ஷேத்திர யாத்திரைசெய்யக்கருதி வடநாடுசென்று சிலகாலங்கழித்துத் திரும்புகையில் சீர்காழியையடைந்து விதிப்படி சுவாமிதரிசனம் செய்துகொண்டு திருக்கோவிலுக்குப் பக்கத்தேயுள்ள சேனைத்தலைவர் மரபினரின் திருமடாலயத்தில் தெற்குநோக்கி வீற்றிருந்த வண்ணமே திருமேனிக்குப் பரிபூரணகாலம் வந்துவிட்டது.

இவர் அங்குபரிபூரணமடைந்த சித்திரை மாதம் சதயநக்ஷத்திரம் அதே நிமிஷத்தில் இங்கு மெய்கண்ட வேலவமூர்த்தியின் சந்நிதியில் மாலைக்காலம் நடக்கும் சமயம் குருக்கள் பக்தர்கள் முதலிய பலரும் பார்க்க இப்புலவர்பெருமான் ஸ்ரீ கந்தவேள் சந்நிதிக்குள் நுழைந்ததை யாவரும் கண்டு திரும்ப வெளிவரக்காணமையால் அதிசய

முற்று பிரமித்தார்கள் பின்னர் விசாரிக்கையில் சீர்காழியில் இவ்விடம் சந்நிதிக்குள் நுழைந்த அந்த க்ஷணத்தில் அவரது திருமேனியை திருத்தி மெய்கண்டவேலவரின் திருவடி நீழலில் ஐக்கியமானது தெரிந்து திருவருளைச் சிந்தித்து வந்தித்துக் களிப்படைந்திருந்தார்கள்.

இம்மகானுபாவரின் திருமேனி தற்போதுள்ள சீர்காழி ரயில்வே ஸ்டேஷனுக்குத் தென்புறத்தேயுள்ள ஸ்ரீ திருத்தாளமுடையார் கோவிலுக்குச் சமீபத்திலிருப்பதாக அறிகிறோம்.

இப்படி மெய்கண்ட வேலவரை கைகண்ட தெய்வமாக பிரத்தியக்ஷத்தில் கண்ட இம்மகானின் திவ்ய இந்நூற்களைப் படித்தவர்களும் இவர் ஜனித்த நக்ஷத்திரத்திலும் பரிபூரணமடைந்த நக்ஷத்திரத்திலும் விரதமிருந்து ஷண்முகக்கடவுளுக்கு அபிஷேக ஆராதனை குருபூஜை முதலியன செய்து வருபவர்கள் இகத்தில் அஷ்ட ஐஸ்வரியமும் பெருவதுடன் பரத்திலும் சதானந்தரா யிருப்பாரென்பது திண்ணம்.

A. G. குமாரசாமி.



உ



வேலுமயிலுந்துணை.

# ஸ்ரீமெய்கண்டவேலாயுதசதகம்.

## விநாயகர்காப்பு.

பின்முடுகு வெண்பா.

காலா யுதத்தான்மெய் கண்டவே லாயுதன்மேல்
வேலா யுதச்சதக மேயுரைக்கச்—சேலார்கண்
கும்பதனச் சம்பிரமக் கொம்பிமயத் தம்பிகைசொற்
கம்பமதத் தும்பிமுகன் காப்பு.

## நூல்.

கலிவிருத்தம்—பிரிந்திசை வண்ணம்.

பொன்பூத்தநூ புரப்பாதமும் புரிபூத்தமார் பீராறுதோள்
முன்பூத்தகண் முன்னான்குடன்முடியாறுகைவடிவேலுமாய்
கொன்பூத்தவென் னிதயத்திலே குடிகொண்டருள்கூர்வா
ய்குற, மின்பூத்தபா காசண்முகா வேலாயுதா வேலாயுதா.

கனவுக்குளே நீவந்தெனைக் கலையோதெனக் கற்பித்ததும்
நினைவுக்குளே கண்டேனலால் நினைவுக்கது நிசமல்லவே
சுனையுற்றநீர் நிழலல்லவே தோன்றாத்துணை யாய்நின்றிடு
வினையத்தையென்சொல்வேனையா வேலாயுதாவேலாயுதா.

பன்னாளெனு மூவொன்பதிற் பதின்மூன்றுநாள் பதினேழு
நாள், இன்னாளினி யின்னாளையே யென்பாரிவை யெந்நா
ளுமே, உன்னாளெனத்திரிவேனினி யொருநாளுமே இருநா
ளுமாய், மின்னாளிடப்பாகன்றரும் வேலாயுதா வேலாயுதா.

உனையே தெய்வ மாதாபிதா வுபதேசசற் குருவென்று
நான், நினையேனவாவொழியே னெறிகில்லேன்றிருவெண்
ணீறுமே, புனையேனொரா றெனுமந்திரம் புகழேனலோ
திகழ்வானவர், வினையேசெய்வஞ் சனையாளுவாய் வேலாயு
தா வேலாயுதா. (ச)

பனைதீர்த்தவன் சிறைதீர்த்தவன் பழிதீர்த்தவன் பகை
தீர்த்தவன், கனைதீர்த்தவன் மறைதீர்த்தவன் கலிதீர்த்த
வன் கருதார்கள்வஞ், சனைதீர்த்தவன் முனைதீர்த்தவன்
தமிழ்தீர்த்தவன் றமிழ்ப்பாண்டியன், வினைதீர்த்தவன் நீய
ல்லவோ வேலாயுதா வேலாயுதா. (ரு)

கானக்கொடி வலமாகியுன் கண்ணன்கொடி யிடமாகியுன்
சூனக்கொடி யவர்பால்வரும் சோழன்கொடி போய்ச்சிறு
வாய், வானக்கொடியிடனுவினன் வாகைக்கொடிதாளுங்கு
டர், மீனக்கொடி யானென்பனோ வேலாயுதா வேலாயுதா.

ஒறுப்பார்களுக் கொருநாட்பல னோங்காரமா மாங்காரமே
பொறுப்பார்களுக் கானுலுமிப் புவிமட்டுமே புகழென்று
தான், மறுப்பாடிலாக்குறள் சொல்லியவகைகண்டுமே வன்
மத்தினுல், வெறுப்பார்களுக் கென்னேபலன் வேலாயுதா
வேலாயுதா. (எ)

எறும்பானையீ றெடுத்தேனுட லின்னம்பிறப் பொழிந்தே
னிலே, யுறும்பாவமென் போற்செய்தபே ருலகத்தொரு
வருமில்லையே, நறும்பாலினெய் போற்கல்வியும் ஞானத்
தையும் நல்காவிடில், வெறும்பாலடையமுதாகுமோ வே
லாயுதா வேலாயுதா. (அ)

எறிக்குஞ்சுடர்த் தீபத்தையே யேற்றும்பொழு திருளான
தைப், பறிக்குஞ்சுடர் தானென்றதைப் பார்த்தோரு
டைப்படலத்தையே, மறிக்கும்மிடமதுகண்டலோ மாயை
க்குநீ வகைசொல்லுவாய், வெறிக்கும்புய தயபாரனே வே
லாயுதா வேலாயுதா. (கூ)

நீறிட்டவர் முகபங்கயம் நித்தந்தரி சித்தாற்பலம்
மாறிட்டம ருலகாளுவார் மறுஜென்மமும் வாராதென

வேறிட்டசே வுடையார்மழு வேற்கின்றது மிதற்கல்லவோ
வீறிட்டநீ றனுபூதிதான் வேலாயுதா வேலாயுதா. (க0)

ஆளாமைபோ லடங்காமலே யஞ்சாமையா யறியாமையாய்
வாளாமை நேத்திரமேபெறு மாளுர்கள்மேல் மயலாகியே
தாளாமையே செய்தேனலாற் றன்மந்தலை காப்பாமெனும்
வேளாமையே செய்தேனிலை வேலாயுதா வேலாயுதா (கக)

அளக்கிற்பெருங் கடலைக்கர மடக்குமுனி கயத்தாமையா
யிளக்கிற்கலை போதித்தநீ யெமக்கெப்படிப் போதித்திடில்
துளக்கிற்புனல் வாகாளுமேசொலத்தகு மெய்ஞ்ஞான
மும், விளக்கிற்கொளுந் தீபந்தமாம் வேலாயுதாவேலாயுதா.

துளாவுமதிப் பிடிதோணிமேற் றூரத்தினிற் செல்வோமெ
ன, அளாவுமனம்பேராசையி லளந்தத்தையே யளப்பாயது
களாவின்கனி மையானதுங் காய்ந்தின்றபின் கனியுண்மை
யாம், விளாவின்கனிகனியல்லவோ வேலாயுதா வேலாயுதா.

தளையும்பெருங் குடும்பச்சுமை தாங்காதுதத்தளித்தால்வழி
யுளையும்சறுக் கலுமாகிஞ லுத்தியோகமெப் படிச்செய்கு
வேன், அளையுங்கலைதெரிகல்வியொன் றற்றுவினியாளுள்வ
ளோ,விளையும்பயிர்முளைசொல்லுமேவேலாயுதாவேலாயுதா.

வள்ளற்சடை மீதேறியே மதித்தோணியாய் மாமக்கரா
வெள்ளப்படாத் துடுப்போடுகொக்கிறகென்னும்பாய்முறை
தூக்கியே, பள்ளப்புனற்பாகீரதிப்பாவைக்குளே பாலாழியா
ம், வெள்ளத்தினில் விளையாடுவாய் வேலாயுதாவேலாயுதா.

வளர்க்கின்றமா மறைநான்முகன் மாலீசனும் வகையாகவே
யளக்கின்றமுக் காணிக்குநீ யருக்காணியாய் யாவர்க்குமே
வுளக்கண்ணிருப் பதையெண்ணிலா ரூரூர்தொறுமுழல்வா
ரவர் விளக்கன்றியேதீத்தேடுவார் வேலாயுதா வேலாயுதா.

கோளூர்வரா கமுமூரவே கூறுங்கர ணமும்யோகமும்
நாளூர்வதுந் திதியூர்வது நமனூர்புகும் நாளல்லவோ
வாளூர்விழிக் குறமாதுதெய் வானைத்திரு மயில்பாகனே
வேளூரனே வயலூரனே வேலாயுதா வேலாயுதா. (௰எ)

வள்ளிக்குநே ரிடையார்க்குமொள் வாளுக்குநேர் விழிநாசி
கை, எள்ளுக்குநேர் மொழியார்க்குமவ் வீசன்விழி யால்
வெங்குறை, கொள்ளிக்குள மெலியாமலே கூர்வாயருள்
கொம்பொன்றிலா, வெள்ளிக்குநா யகசுந்தரா வேலாயுதா
வேலாயுதா. (மஅ)

எள்ளாடுசெக் கைப்போலவு மீக்காலையா டற்போலவுங்
கள்ளாடுபூ மணம்வண்டுபோற் காப்பாற்றுயிர் கவர்வானெ
மன், பள்ளாடுவேளையில்வந்து காபலதெய்வநின்னிகர்வெய்
துமோ, வெள்ளாடரிப்போலாகுமோவேலாயுதாவேலாயுதா.

உள்ளானைமெய் யுரையானைமா லொழியானைவீண் பழியா
னைபொய், தள்ளானைவஞ் சகத்தானைநோய் தவிழானைப்பா
தகத்தானை, கெள்ளானைவொன் றறியானைநின்றேத்தானை
நீ ரெட்சித்திடாய், வெள்ளானைமா முகத்தான்றுணை வே
லாயுதா வேலாயுதா. (உo)

நாளைக்கிருப் போமென்பதும் நம்பிக்கையோ நற்சந்தன
வாளைக்களந் தனில்வைத்திடும் வாறல்லவோமாய்கின்றநா
ள், காளைக்கடா வினிலேறிவெங் கட்காலஞர்கடினஞ் செயு
ம்,வேளைக்குநீ துணையாகுவாய் வேலாயுதாவேலாயுதா.(உக)

கோளொன்றுமே சொல்வார்புகழ் கொள்ளாரையுங் குன்
ஞெப்பதாங், தோளொன்றுநம் துரையென்றுசெஞ் சுடரெ
ன்றுநீ துணையென்றுபொற், ருளென்று சொன்னதுமன்றி
யே சற்றும்பய மில்லாதுசெவ், வேளென்றபா தகமென்று
போம் வேலாயுதா வேலாயுதா. (உஉ)

வளையாடமே கலையாட நூல் வடமாட நூ புரமாடவே
கிளையாடவே கொடியாடவே கிளியாடவே யளிபாடமர்
தளையாடவே நடமாடமா தரைமேவுகா மியையாளுவாய்
விளையாடுமா மயில்பாகனே வேலாயுதா வேலாயுதா. (உங)

நீளாமலே வினைகாலமும் நேராமலே நிரையத்தலம்
ஆளாமலே பொறியாலுள மலையாமலே யனல்வாயுடல்
மாளாமலே மாண்டாலுனை மறவாமலே மறுஜென்மமும்
மீளாமலே யெனையாளுவாய் வேலாயுதா வேலாயுதா. (உச)

சூழாமலே கலிதீவினை தொடராமலே படர்நல்வினை
பாழாமலே யயனுருப் பண்ணாமலே பெண்ணாசையா
லாழாமலே யமதூதர்வந் தணுகாமலே நரகத்தின்வாய்
வீழாமலே யெனையாளுவாய் வேலாயுதா வேலாயுதா. (உரு)

அழலுக்கிடும் விறகாகுமென் றறியாமலே பொறிமாதர்கள்
குழலுக்கிடும் மலர்யாவையுங் கொண்டேகியுன் றண்டா
மரைக், கழலுக்கிடும் வகைசற்றுமே கருதாமலென் புரு
டாயுளும், விழலுக்கிடும் புனலாகுமோ வேலாயுதா வே
லாயுதா. (உசு)

வழியாயிரங் காட்டாமலோர் வழியாயிரங் கரைசெய்குவாய்
பொழியாயிரம் பேராயுனைப்புகழத்தொழத் தெரிசிக்கவே,
மொழியாயிரம் நன்னாவுடன் முளரிக்கர மோராயிரம், விழி
யாயிரம் பெற்றேனிலை வேலாயுதா வேலாயுதா. (உஎ)

பூவாகியுன் னடிசார்ந்திலேன் பொடியாகியுன் மெய்தீண்டி
லேன், பாவாகியுன் பேர்தாங்கிலேன் பணியாகியுன் புயமா
கிலேன், றேவாகியுன் படையாகிலேன் சேயாவடி யேனுய்
வனோ, மேவாதசூரனை வென்றவா வேலாயுதா வேலாயுதா.

தவத்துக்குடம்பெடுத்தேனிலை தாரித்திரத்தோற்றத்துட
னவத்துக்குடம் பெடுத்தேன்பிணி யாசைக்குடம் பெடுத்
தேனறும், பவத்துக்குடம் பெடுத்தேன்பிறர் பழிப்புக்
குடம் பெடுத்தேன் மன, விவத்துக்குடம் பெடுத் துய்வ
னோ வேலாயுதா வேலாயுதா. (உகூ)

காலாயுதா வாசாலகா காபாலிசே யாபூதரா
சீலாவிசா காதாபரா தேவாதிபா சேனாதிபா
நாலாகலா கோலாகலா ஞானோதயா வேதோத்தமா
மேலானவா நாகாபுரா வேலாயுதா வேலாயுதா. (௩0)

மாலென்றுமென் னிடமாகையால் மடவார்கள்கண் வாளெ
ன்றுசெஞ், சேலென்றுமைக் கடலென்றுமத் தேனென்று
மம் மானென்றுவெங், கோலென்றுசொன் னதுமன்றியே
குணகீனனன் கூசாமலுன், வேலென்றபா தகமென்று
போம் வேலாயுதா வேலாயுதா. (௩க)

வல்லங்கமா முலைகாட்டியும் வாளங்கமாம் விழிகாட்டியு
மல்லங்கமாங் குழல்காட்டியு மமுதங்கமாமொழிகாட்டியும்
பல்லங்கமாம் நகைகாட்டியும் பங்கப்பரத் தையர்செய்திடும்
வில்லங்கமே தீர்த்தாளுவாய் வேலாயுதா வேலாயுதா.

கல்லாதவன் றுதியாதவன் கருதாதவன் கற்றோர்கள்பாற்
செல்லாதவன் பணியாதவன் றெளியாதவன் செவியாத
வன், பொல்லாதவன் பூணாதவன் பூசாதவன் புலனைந்தை
யுட், வெல்லாதவ னினியுய்வனோ வேலாயுதா வேலாயுதா.

விலங்கைவலி யம்மென்றடி மேலர்ச்சனை செய்யாக்கொடு
விலங்கைப்புரப்பதுமுன்கடன் மிகவெம்பினே னுனைநம்பி
னேன், விலங்கைச்செயம் பெறுசூரனை வென்றவிபூ தர்க
ன்காவினில், விலங்கைத்தறித் திடுகந்தனே வேலாயுதா
வேலாயுதா. (கச)

மாலுக்கிணை தானாகியே வழங்காதவன் வயிறோ பெருஞ்
சாலுக்கிணை தானானவன் றருவாரையுந் தடைசெய்குவே
னாலுக்கிணை யாய்நல்கிடா தளிக்குந்தரு விக்குந்தடை
வேலுக்கிணை தானாவனோ வேலாயுதா வேலாயுதா. (கரு)

சேலுக்குவேல் வாளுக்குமை திளைக்குங்கரு விளைக்குமது
காலுக்குநீள் கடலுக்குமக் கடுவுக்குமா வடுவுக்குவெங்
கோலுக்குமங் குடங்கைக்குநற் குவளைக்குமா னெமனுக்கு
ம்வை, வேலுக்குநேர்விழிவள்ளிசேர்வேலாயுதாவேலாயுதா.

மாலைப்பிறை போற்செல்வமும்வளராமலே வறுமைத்துயர்
காலைக்கதி ரெழுமுச்சியிற் கனலொத்திடுங் கடினத்தி
னால், ஆலைக்கிடுங் கழையாகினே னழலுக்கிடு மெழுகாகி
னேன், வேலைக்கிடுந் தூறாகினேன் வேலாயுதாவேலாயுதா.

தோளுந்துணை யென்புந்துணை துணையாகையால் துணையா
கிய, காலுந்துணை கையுந்துணை கண்ணுந்துணை கண்புக்
கெலா, மாலுந்துணை யதுபோல்வரு மாதங்கநேர் போதி
னான, வேலுந்துணை மயிலுந்துணை வேலாயுதா வேலாயுதா.

தலைக்கப்புற மோடும்புனல் சாணோடியென் முழமோடி
யென், மலைக்கப்புற முயர்பாவமும் வளர்ந்தாலும் வகை

யேதினி, நிலைக்கும்படி தயைசெய்குவாய் நீயன்றிவே றில்லைப்பிறை, மிலைக்குஞ்சடைப் பரமன்றரும் வேலாயுதா வேலாயுதா.

நற்புத்திரா நன்மார்க்கரா நன்ஞானரா நல்லோர்வயிற் றற்புத்தியி னற்கோள்பதி னோராமிடத் துதயஞ்செயக் கற்புத்தியாய்க் கதிரானர்போற் கற்பித்தியாய் கருணாகரா வெற்பத்திமா முகனார்துணை வேலாயுதா வேலாயுதா. (௨௦)

நாலாகலைக் கீரர்க்குவேல் நடத்தும்படி நமனெய்தினால் சேலாகிய விழிவள்ளியார் தெய்வானையாந் தேனாருடன் மாலாகிநீ விளையாடினால் மயிலாகினு மயில்தப்பினால் வேலாகிலும் வரக்காட்டுவாய் வேலாயுதா வேலாயுதா. (௨௧)

தலையாந்திறப் பிணைகாட்டியுந் தாளாந்திறச் சிலைகாட்டியு மலையாழியில் விழுவார்கள்போ லழுந்தாமலு மிதவாமலுந் தொலையாதசஞ் சலவாழ்க்கையிற் சுழல்போதொரு சுறவா ய்வரும், விலைமாதர்பாலுறவாவனோவேலாயுதாவேலாயுதா.

துரகத்தையே செய்தேனலாற் சுகிர்தத்தையே செய் தேனிலை, யுரகத்தினுக் கமுதங்கொடுத் துறவாடியே பெறுநஞ்சுபோல், நரகத்தையே பெறுமெய்ப்பொருள் நானல்கவே யூனல்குவார், விரகத்திலே மனம்வைப்பனோ வேலாயுதா வேலாயுதா. (௨௩)

சரதத்தையே சொல்லாமலே சரதத்தையே சொல்வார்ம தன், இரதத்தையே நிகரல்குலா ரின்பத்தையேயன்புற்று நான், சுரதத்தையே செய்தேனலாற் சுகிர்தத்தையேதரு கார்த்திகை, விரதத்தையேசெய்தேனிலைவேலாயுதா வே லாயுதா.

காரானமே னியன்வாசவன் கஞ்சாசன னஞ்சானன னாராலுமே முடியாவணம்யாமே முடித்தருள்வோமெனச் சூராதிசூரனைவென் றுவிண் டொடுக்கிடத் தவசம்பெறு வீராதி வீரனும் நீயலோ வேலாயுதா வேலாயுதா. (௨௫)

அருந்தாதைதாய் மகன்றாரமா மெம்பாரமே சுமந்தாசை யால், வருந்தாதெலா மெலிந்தோயவோ வளைந்தேறுகூ

னுடம்பானவா, ரறிந்தாரிதோ மடிந்தாரைரயோ வெனும்
போதிலே செழுந்தீயின்வாய், விருந்தாகவே யிருந்தேனே
யாள் வேலாயுதா வேலாயுதா. (௪௬)

துரும்பானதைத் தூணுக்குவாய்த் தூணைதைத் துரும்பா
க்குவா, யரும்பாரமே ருவைரேணுவா யணுவானதை மக
மேருவா, யிரும்பாரிற்செய் வாய்சாட்டைதா னில்லாமற்
பம் பரமாட்டிய, விரும்பாண்மையின் றிறமென்சொல்
வேன் வேலாயுதா வேலாயுதா. (௪௭)

பூரித்திடுஞ் சுடரித்திடும் புளகித்திடும் பூணுரமே
பாரித்திடு மிளநீரெனப் பச்சென் றிடும் வெச்சென்றலங்
காரித்தசெப் பெனவிம்மியே கச்சுக்கடங் காமற்பொரும்
வேரித்தனக் குறமங்கைசேர் வேலாயுதாவேலாயுதா.(௪அ)

வருதிட்டமும் பொருதிட்டமும் மதிதிட்டமும் விதிதி
ட்டமு, மொருதிட்டமோ பலதிட்டமோ வோதிட்ட
சொல் வாதிட்டமே, பொருதிட்டசூரனை வேலினாற் பொ
ன்றிட்டுற நினதென்னவே, விருதிட்டசேவற்கேதனு வே
லாயுதா வேலாயுதா.

குரலைக்கொடி சாவற்பரி கொங்கைத்துணை பதியாயுத
மிரலைக்கக விடைதாரமின் னென்றுலுநீ பொறுக்கக்கடன்
நரலைக்கொரு மகராகர. நயனத்திலே கைபட்டிடில்
விரலைத்தறித் திடுவார்களோ வேலாயுதா வேலாயுதா.(௫0)

மயில்மஞ்சினைக் கண்டாற்போல மகிழ்வெய்தியே வாஞ்சி
த்தபேர்க், கயில்மஞ்சனப் பதுமச்சர ணுதாரமென் றறியா
மலே, துயில்மஞ்சமா ளிகைசெம்பொனே சுகமென்றுமே
துணியும்பொலேன், வெயில்மஞ்சளே நிலையென்பனோ
வேலாயுதா வேலாயுதா. (௫௧)

கைகண்டநெல் லியைப்போலவே கரங்கண்டுளங் களிகூ
ரவே, யைகண்டமே லுறுநாளில்வந் தஞ்சேலெனு வருள்
செய்குவாய், செய்கண்ட நாகையிலுத்தமத் தியாகேசர்
தன் சேயாகுகா, மெய்கண்ட வேலாசண்முகா வேலாயுதா
வேலாயுதா. (௫௨)

பயனுகைக்கே தமிழ்பாடினுற் பகர்தீபமாம் பரிசித்திடில்
வயனுகைக்கே யெழுதாவிடி லாற்றங்கரை மரமல்லவோ
சயனுகைக்கே சரிமார்க்கமாக் காலாடிதன் றுணையானவர்
வியனுகைக்கே சயவாகனு வேலாயுதா வேலாயுதா. (௫௩)

ஈயாமலும் நல்லோர்களை யெண்ணுமலு மெண்ணிக்கலை
யாயாமலுந் தேளாமலு மறியாமலு மறிவீனர்பா
லோயாமலுந் தமிழ்சொல்லியுமுண்டோபலனுனை நம்பினே
ன், வீயாமலுன்னருள் செய்குவாய் வேலாயுதா வேலாயுதா.

கைசொல்லுவேன் புடைவைக்குளே சைச்சாடையுஞ் சொ
ல்வேன்மழு, நெய்சொல்லுநின்னையென்பது நீயென்றுளம்
நினையாதவன், பொய்சொல்லுவேன் வசைசொல்லுவேன்
புறஞ்சொல்லுவேன் பிழைசொல்லுவேன் மெய்சொல்லு
வே னறிகின்றலன் வேலாயுதா வேலாயுதா. (௫௫)

நம்பிக்கையா னவனுக்கொரு துணையானவா சுரர்சேவிதா
நம்பிக்கைநீ யல்லாமலே நாடேனொரு தெய்வத்தையு
மம்பிக்கைநேர் விழியார்மொழி யார்வுக்குடை யானென்று
தான், வெம்பிக்கைவிட்டாலுமய்யனுவேலாயுதாவேலாயுதா

ஆம்போதும்வேல் மயிலுந்துணை யாகாமலே யாசங்களுர்,
போம்போதும்வேல் மயிலுந்துணை பொறிநட்பமும் நெறி
தப்பியே, சாம்போதும்வேல் மயிலுந்துணை சடம்வீழ்ந்த
பின் பிடிசாம்பலாய் வேம்போதும்வேல் மயிலுந்துணை
வேலாயுதா வேலாயுதா. (௫௭)

காம்பாகுமென் றோள்வல்லியார் காந்தாபுகழ்ச் சேந்தாவிட
ப், பாம்பாகுமா பரணன்றரு பாலாதிருப் புகழுக்குமெய்,
யாம்பாகுபோல் நற்கீரனு ரருளுந்தமிழ்க் கடியேன்றமிழ்
வேம்பாகுமே கரும்பாகுமோ வேலாயுதா வேலாயுதா (௫௮)

காப்பாகிலும் படைப்பாகிலுங் கருதாமலே யழிப்பாகிலு
மூப்பாகிலும் வேள்வித்தொகை முடிப்பாகிலுமற்றேரிலுங்
சோப்பாணசெந் தமிழ்பாடியே கொண்டாளுமென் குல
தெய்வம்நீ, மீப்பானுவை நிகர்குண்டலா வேலாயுதா வே
லாயுதா, (௫௯)

அப்பத்தரா மறுபத்துமூ வடியார்களுக் காயுன்பிதா செப்பத்தொடு வந்தாட்கொளுஞ் சேதிக்குநான் சிறியே னெனிற், கொப்பத்தில்வீழ் கரியென்னவே கூற்றுனவன் கொடுபோகவே, வெப்பத்துடன் வாராமலாள் வேலாயுதா வேலாயுதா. (௬0)

நீந்தாத்துயர் நட்டாற்றினில் நீகைவிடில் நிலையேதினி சேந்தாகடம் பாசண்முகா சேயாகுகா தெய்வானைதன் காந்தாசிலம் பாகாங்கயா கந்தாகதிர் காமத்தினில் வேந்தாவருள் கூர்ந்தாளுவாய் வேலாயுதா வேலாயுதா(௬௧)

அந்தப்பதஞ் சரியைக்குமெய் யவிரப்பதங் கிரியைக்குமே யிந்தப்பதம் யோகர்க்குமே யீற்றுப்பதம் ஞானர்க்குமே தொந்தப்பத மாளுவினிச் சும்மாவிடு வேனோவர விந்தப்பதம் தந்தாளுவாய் வேலாயுதா வேலாயுதா. (௬௨)

சிந்தாகுலந் தீர்ப்பாயினித் தீராவிடிற் செவ்வேளெனக் கந்தாவெனச் சொல்வேனுனைக் கடம்பாபெருங் கற்பாவை தன், மைந்தாவெனப் பித்தன்றரு மகனேயென வசைபே சுவேன், விந்தாசலப் புயபாரனே வேலாயுதா வேலாயுதா.

வந்திட்டது கண்டேனலால் வாராமையைக் கண்டேனிலை நொந்திட்டதா விக்கென்பனோ நோய்சேருடற் கேனென்ப னோ, முந்திட்டவோ நின்றேப்பதா மூன்றும்பிரி பாகந் தரில், வெந்திட்டதும் வினையெய்துமோ வேலாயுதா வே லாயுதா. (௬௪)

போதாந்தமாய்ச் சுடரெய்தியே போய்நின்றபின் ஞளாந்த மாய், மாதாந்தமாய் வருஷாந்தமாய் வயதாந்தமாய் வருமு ன்னரே, நாதாந்தனே லோகாந்தமாம் ஞானந்தமே வரநல் குவாய், வேதாந்தனே யேகாந்தனே வேலாயுதா வேலா யுதா. (௬௫)

முத்தேபதுமத்தேவளர் முதலேயொரு முத்தேவர்சம் பத்தேமறைப் பொருளேபொருட் பரமேபர மானந்தமே சித்தேபரி சித்தோருளத் தேவேமிகத் தெய்வப்பயிர் வித்தேவிசைக் கதியாதிபா வேலாயுதா வேலாயுதா. (௬௬)

மதனப்படும்மலர்தைக்கவே வடுவிட்டபுண் ணொருபக்கமா
ய்ச் சதனப்பட்ட முலையார்நகந் தைக்கின்றபுண் ணொருப
க்கமா, யதனப்படும் வலியோடெம னடுவாள்புணி விடுமோசா
லென, விதனப்படுமெனை யாளுவாய் வேலாயுதா வேலாயுதா

மாதாபிதா வாசானுநீ மாமானுநீ மாதேவனீ
யாதாரநீ யாகாயநீ யாசாரநீ யாள்வானுநீ
தாதாவுநீ தாரானுநீ சார்வானுநீ சாரானுநீ
வேதாவுநீ பாவீசனீ வேலாயுதா வேலாயுதா. (௬௮)

வேதாரணி யஞ்சேர்ந்திடில் விடுவார்களோ சேவிப்பது
வேதாரணியடிமைப்பணி விடையல்லவோ வினிமேற்குறை
வேதாரணிச் சடிலன்றரு விழியேவிழி மணியேமிக
வேதாரணி மணிமார்பனே வேலாயுதா வேலாயுதா. (௬௯)

மதிவண்ணமா முகவண்ணமும் மலைவண்ணமாம் புயவண்ண
மும், நிதிவண்ணமே னியின்வண்ணமும் நிறைவண்ணமே
விழிகொள்ளுமோ. யதிவண்ணமாங் கெதிவண்ணமே யை
வண்ணமே யிவ்வண்ணமோ, விதிவண்ணமு மெவ்வண்ண
மோ வேலாயுதா வேலாயுதா. (௭௰)

வேதண்டகோ தண்டன்றருவேளேதிரு மெய்ஞ்ஞானமாம்
கோதண்டமால் மருகாவுனைக் கும்பிட்டவர் முன்வந்துநீ
வேதண்டமே பாரப்பிணி விட்டோடமெய் யருள்கூருவாய்
வேதண்டசூ ரனைவென்றவா வேலாயுதா வேலாயுதா. (௭௧)

கத்தூரியே யக்காரமே கர்ப்பூரமே கட்டாணியே
முத்தாரமே சட்கோணமே முக்கோணமா நிட்சேபமே
கொத்தாருவே தத்தாலுநின் கொட்டாரமே யெட்டாதநூ
ல், வித்தாரநீ பத்தாமனே வேலாயுதா வேலாயுதா. (௭௨)

வேதத்துநற் பொருளென்றுனை மெய்யுண்மையாய்விரும்பி
க்கொள, வேதத்துவநிலையாமது மிருசண்டுவின்மகனுக்குற
வேதத்துவ ரும்போதுபொய் மெய்யாகவு மிலையோமிக
வேதத்துமஞ் ஞையிலேறிய வேலாயுதா வேலாயுதா (௭௩)

கண்ணேறுசற் றணுகாமலே காப்பாயெனைக் காராலுமோ
தொன்னூறுடனொருபத்துமே சுகமாயுனைத்தெழுதேத்த

வே, தண்ணீறுமெய்ஞ்ஞானேதயந்தருநீறுசுந்தரநீறெனும்
வெண்ணீறுதந் தெனையாளுவாய் வேலாயுதா வேலாயுதா.

பூணைசையுங் கலையாசையும் பொருளாசையும் பொருள்சேர்
நதிடிற், பேணைசையும் மகவாசையும் பெண்ணாசையும் மண்
ணாசையு, மூணைசையும் பதினறெனை வோதாசையும் பேரா
சையாம், வீணைசையென் றெழியுங்கொலோ வேலாயுதா
வேலாயுதா. (எ௬)

கண்ணப்பர்கா லுதைபட்டதுங் கற்சாக்கிய ரெறிபட்டது
மண்ணப்பமும் விசயன்கைவில் லடிபட்டது மரனல்லவோ
வெண்ணப்படி மோட்சந்தர விலையோவடி யேன்சொல்லிய
விண்ணப்பங்கேட்டருள்கூருவாய் வேலாயுதா வேலாயுதா.

தீண்டாவழும் பிரத்தந்தை சேர்ந்தென்புதோல் போர்த்
தன்புட, னூண்டாங்குமொன்பது வாசன்மேலொருவாசலி
லுண்டாகியே, மாண்டாலொரு பிடிசாம்பலாய் மண்ணாய்
விடு மாயச்சடம், வேண்டாமையா வேண்டாமையா வேலா
யுதா வேலாயுதா. (எஎ)

திண்டாட்டந்தீர் மன்றாட்டமே செய்வாய்தயித் தியரான
வர், கொண்டாட்டமுங் களியாட்டமுங் குடியாட்டமுங்
கூத்தாட்டமும், வண்டாட்டமும் வம்பாட்டமும் மாறாட்
டமும் போராட்டமும், மிண்டாட்டமுந் தீரப்பொரும்
வேலாயுதா வேலாயுதா. (எஅ)

கண்டாமரை முகந்தாமரை கைத்தாமரை கழலாமடி
யொண்டாமரை வாய்த்தாமரை யுளத்தாமரை யோர்ந்
தெய்துவாய். வண்டாமரைக் கொடிபோலளி வான்முட்
டவே மதியானது, வெண்டாமரை யாம்நாகையில் வேலாயு
தா வேலாயுதா. (எகூ)

தூண்டாமலும் பாபங்கள்பொய் சொல்லாமலும் விலைமா
தரைத், தீண்டாமலு மறிவீனரைச் சேராமலுஞ் சமயங்க
ளிற், றண்டாமலும் பிணியால்மனஞ் சலியாமலும் பரதா
மே, வேண்டாமலுமருள்கூருவாய் வேலாயுதா வேலாயுதா.

ஆண்டெபிறக் குந்திங்களீ ராறிற்றிதி யைம்மூன்றினு
மாண்டெபிறக் கும்மேழினில் வாராதிரு பத்தேழினை

ளீண்டுபிறக் கும்யாவுமே நிலையாதகா ரணமல்லவோ
மீண்டும்பிறப் பெய்தாமலாள் வேலாயுதா வேலாயுதா (௪௧)

இடியாலடி படுமோசுண மெனவேவரு மெமதூதர்கைத்
தடியாலடி படுமென்றுயர் சாற்றுந்திரு வெண்ணீறெனும்
பொடியாலடி படவேயருள் புரிவாயுனைப் போற்றார்கள்போ
ல், மிடியாலடி படநீதியோ வேலாயுதா வேலாயுதா. (௪௨)

படவும்படா தில்லாமையிற் பட்டாலுமோ பாவங்களாற்
கெடவும்படாத் தீயர்களைக் கெஞ்சப்படா துண்டிக்கிரை
யிடவும்படா குடிமைச்சுமை யெடுக்கப்படாதென்றாலுமோ
விடவும்படா தென்செய்குவேன் வேலாயுதா வேலாயுதா.

உடலைப்பல நாளுமெடுத் தோய்வின்றியே யொழியாப்
பெருங் கடலைக்கடப் பதுமெந்தநாட் கப்பற்ககப் படுசாக
மாய், நடலைக்குடி மையைநம்பியே நமனுக்கிறைக் குடியா
வனோ, விடலைக்குரு பரநாதனே வேலாயுதா வேலாயுதா.

ஆடிக்கைநேர் தெண்டித்தபேர்க் களித்தோர்களு மருமந்த
பொன், றேடிக்கையா லீந்தோர்களுஞ் சீர்கேடராய்ச் சீமா
ன்சளாய் வாடிக்கைமேல் வாடிக்கையாய் வரப்பண்ணு
மூன் மதிமந்திரம், வேடிக்கைமேல் வேடிக்கைகாண் வே
லாயுதா வேலாயுதா. (௪௫)

மடப்பாவைமார் விடப்பார்வையோ நெருப்பாறுசேர் மயிர்ப்
பாலமோ, நடப்பார்களோ வினிப்போதுநீ நயப்பாகநின்
னீராறுகண், ணடப்பார்வைதா வுடற்பாதியா மலைப்பாவை
யா ருழைப்பாணியார், விடைப்பாலருள் தவப்பாலனே
வேலாயுதா வேலாயுதா (௪௬)

நடைதந்தெனை நடத்திப்பிறர் நகைதந்தது மாற்றிக்கலை
யுடைதந்தமு தூண்டந்தபூ ணொளிதந்துயர் களிதந்தருள்
மடைதந்துநல் வழிதந்தெமன் மதியாதுனைப் பிரியாத்தல
விடைதந்தெனை யாள்வாயினி வேலாயுதா வேலாயுதா(௪௭)

எடுப்பார்களும் பல்லக்கின்மே லிருப்பார்களு மிவர்தம்மி
லே, கொடுப்பாரையுங் கொடுக்காரையுங் குறியாலறி வித்

தாய்கொடை, தடுப்பாரையுங்காட்டாமலே தனைவந்தடைந்
தோர்க்காயுயிர், விடுப்பாரையுங் காட்டாயினி வேலாயுதா
வேலாயுதா. (அஅ)

எட்டிக்கனி கண்டாலழ கெடுத்துப்புசிப் பாரோவெறுங்
குட்டிச்சுவ ரெனுலோபரைக் குறியாவண மருள்வாய்சமர்
கிட்டிப்பொரு மசுரப்படை கெட்டுப்பிற கிட்டுச்செல
வெட்டிப்பலி யிட்டுப்பொரும்வேலாயுதா வேலாயுதா. (அகூ)

உடற்கைப்பழ வினைத்தோற்பையை யூரும்புழு வுறைகந்த
லைச், சடக்கைக்குதித் துயிர்போய்விடிற் றுயுந்தொடில்
ஸ்நானஞ்செயுந், தொடக்கைக்கழு வுண்ணும்பொதிசோற்
றைக்குறுநாற்றைறப்பெரு, விடக்கைச்சுமந் தென்னேபலன்
வேலாயுதா வேலாயுதா. (கூ0)

மோடத்தைவே ரறநீக்கியேமோனத்தினால் ஞானத்தினாற்
றேடத்தையு மறநீக்கியே சுட்டாய்ச்சொலுஞ் சட்டாக்க
ரப், பாடத்தையும் வருவித்தபின் பருவப்படும் பண்டா
ரமாம், வேடத்தையுந் தந்தாளுவாய் வேலாயுதா வேலா
யுதா. (கூக)

செஞ்ஞாயிறு நாள்வாங்கியே செல்லச்சமன் செங்கைப்ப
டல், பஞ்ஞாகப்பாய்ப் படுத்தோரை யப்படியாக்கிலெப்ப
டியுய்குவேன், அஞ்ஞானமாந் திமிரங்களை யாதித்தன்முன்
பனியாக்கியே, மெஞ்ஞானமே தந்தாளுவாய் வேலாயுதா
வேலாயுதா (கூஉ)

துஞ்சாமலே துயராமலே சோராமலே சோம்பாமலே
யெஞ்சாமலே யிரியாமலே யேறாமலே யில்லாமையா
லஞ்சாமல்நோ யணுகாமல்மெய் யழியாமலே யாகாமிய
மிஞ்சாமலே யருள்வாய்வரம் வேலாயுதா வேலாயுதா.(கூ௩)

நேசிக்குமுன் னடியார்களை நேசிக்கவும் நின்பாதமே
பூசிக்கவு மானந்தமாய்ப் பூரிக்கவும் போற்றத்தமிழ்
வாசிக்கவு மவுனத்திலே வாழ்விக்கவுஞ் செய்யாமலே
வேசிக்குமால் கொளவைப்பையோ வேலாயுதா வேலாயுதா

வெங்கைக்குநோ சிலையாளரை வெறுவாய்க்கிலை கெட்டோ
ர்வளை, வெங்கைத்தன பதியென்னவே வீணிற்றமிழ் பாடா
மலாள், வெங்கைப்பிரானருள்சேயனே மிக்கார்குறத்திக்கா
கவே, வெங்கைத்தருவாய்நின்றிடும் வேலாயுதா வேலாயுதா.

வாகாமலர் வேதப்பிரான் மணத்தச்சன்வைத் திடுகேப்பலை
யாகாமியக் கடல்மேற்பொறி யைம்பாயிணு லலையாமலே
பாகாமெஞ்ஞா னத்தீவுறப் பதபங்கயக் கரையேற்றிடும்
மீகாமனீ தானேயலோ வேலாயுதா வேலாயுதா. (௯௬)

பகடன்புற வுயிருக்கெலாம் பறந்திட்டபுள் விலங்குக்கட
ககடன்கள வுக்காளைய னைம்பூதியத் தாலூர்ந்திடுஞ்
சகடன்குணம்பொறைகல்வி நற்றவமற்றவன் சகலர்க்குமே
விகடன்றனக் கருள்கூருவாய் வேலாயுதா வேலாயுதா(௯௭)

மோகாடவி வளருங்கொலோ முருகாடவிக் குழலார்கள்மே
ல், மாகாடவி.நிலவென்னவே வாணுளெலாம வீணுளதாம்
நாகாடவி யிடியென்னவே நமன்வந்திடும் நாள்வந்துகா
மேகாடவி திகழ்நாகைவாழ் வேலாயுதா வேலாயுதா. (௯௮)

அகுதிக்குவே றொருதிக்கு மில்லாதிக்குடி லைப்பேர்வினைப்
பகுதிக்குள மெலியாதருள் பரிதிக்குநீ சுருதிக்குளார்.
தொகுதிக்குநீ தகுதிக்குநீ சோதிக்குரு பரனேயருள்
மிகுதிக்குநீ யல்லாதிலை வேலாயுதா வேலாயுதா. (௯௯)

குகவாழிசெந் தூராவினன் குடிவாழிபுட் கொடிவாழிசண்
முகவாழிசூர்ப் பகைவாழியுன் முன்வாழிநீ பஞ்சேருமார்
பகவாழியிச் சதகந்தனைப் படித்தோர்களுங் கற்றோர்களு
மிகவாழிவேல் மயில்வாழியே வேலாயுதா வேலாயுதா(௧௦௦)

## ஸ்ரீ மெய்கண்ட வேலாயுத சதகம்





உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

திருநாகையில்

திருக்கோயில் கொண்டு விளங்கும்

ஸ்ரீ மெய்கண்டவேலவரென்னும்

குமாரக்கடவுள் பேரில்

# திறப்புகழ்



விநாயகர் காப்பு—வெண்பா.

வடிவைப்பொருநெடுங்கண் வல்லவையாம் பச்சைப்
பிடியைப் புணர்களிற்றைப்பேணி—யடியைத்
தினம்நினைந்தாரெய்தாச் சிறப்புவேறுண்டோ
மனம்நினைந்த தெல்லாம்வரும்.

வள்ளைநிகர் குழையாள்வள்ளிக் கொடிபுணர்ந்த
கள்ளவிழும் நீபர் மெய்கண்டவர்மேல்—வெள்ளை
திறப்புகழைப் பாரினிறுத்து தற்காவேண்டித்
திறப்புகழைச் சொன்னேன்றெளிந்து.

## நாகாபரணப் பிள்ளையார் துதி.

---

1. தானாதன தத்தன தனனாதன
தானாதன தத்தன தனனாதன
தானாதன தத்தன தனனாதன—தனதான.

சீரார்சுவைமுப் பழமுடனே யிள
நீர்பாயசமிக் கதிரசமாவடை
தேன்மோதகமெட் பொரிபுளியோதரை கடுகோரை

தேன்மாதுளநற் கனிகுளமா ரவல்
நீடாழைபருப் பளையொடு தோசைகள்
சேதாவமுதத் துடனிவையாவையு மயில்வோனே

பாரார்கயிலைக் கிரியரனா ரருள்
வேலாயுதமெய்க் குமர சிகாமணி
பாகார்வசனக் குறமகள் பால்வரு மலர்மீதே

பாவாணர்துதித் திடுமியல்பாயொரு
நூறாநதிறப் புகழெனவே முதிர்
பாமாலையுரைத் திட வருள்கூர்வது மொருநாளே

வாராழிவளைத்திடு மகமேருவை
யேடாக மருப்பொரு கரமேகொடு
மாபாரத முற்றெழுதிய காரண வடிவோனே

மால்யானைமுகத் தவுணனையே யெதிர்
போராடி யுயிர்ப் பலிகொளுநாயக
மாதேவர்துதிக் கையின் மலர்வாய்மறை புரிகோவே

நாராயணனுக் கொருமருகாவுயர்
காரோணர்வரத் தினில் வருபாலக
நால்வாய்மதமுக் கணத்துடைபீதொரு மயிலோனே

நாவாய் குண பற்பலபொருணீடிய
மேகாடவி சுற்றிய திருநாகையி
ஞகாபரணக் கணபதியே கட வுளர்வாழ்வே.

---

2. தத்தான தானன தந்தன தானன
தத்தான தானன தந்தன தானன
தத்தான தானன தந்தன தானன—தனதான.

மட்டாருமூவிரு பங்கயமாகிய
சட்கோணமீதிலிருந்த சொரூபமு
வற்றாத மூவிரு சந்திரர்கூடிய முகமாறும்

மற்றோள்களாறு செம்பொனின்மேருவு
நற்காதிலாறிரு செஞ்சுடரேநிறை
வைப்பாகவே வளர்குண்டலராசியு மறைநாலும்

முட்டாமலோதிய செங்கனிவாயமு
தப்பார்வையாறிரு கண்களுமே யணி
முத்தாரமார்பமு மம்புயமே நிகர் கரமீதே

முக்கோணமாகிய வெம்பகை வேலுடன்
மிக்கானதோகையில் வந்தவிநோதமு
முற்கோலியே யறியும்படியேவர மருள்வாயே

அட்டாளதேச மடங்கலுமேருவு
மெட்டானமாதிர மும்பதிஞலுல
கப்பாலுமேயுள வண்டருமே பணி யிருபாதா

அக்காரமேகனியின் சுவையேமது
ரப்பாகமே குளிர்சந்தனமே கும
ரப்பாகுகாகுற மங்கைமனோகர குருநாதா

கட்டாரமான கடம்பணிமார்பக
நிக்ஷேபமே சிவசந்ததியே கன
கத்தாருவேமணியொன்பதுபேர்துணை யெனும்வீர

கற்பூரமேமறையின்பொருளேகமழ்
கஸ்தூரியேகையிலங்குசனாருயர்
கற்றூணிலாடிய வைங்கரனார்* துணை முருகோனே.

---

3. தானா தனத்தன
தானா தனத்தன
தானா தனத்தன—தனதான.

மாதா வனப்பிளமை
வீணா யழித்தவனை
வாணாள்சிறுத்தவனை யிடர்தீராய்

வாழ்வோ தரித்திரனை
ஊனோ பெருத்தவனை
வாயோ வசத்தியனை நிலைபேறும்

ஆதாரமற்றவனை
ஆசாரம் விட்டவனை
யாபாசமுற்றவனை யறுபானோ

டாறுறு தத்துவனை
யாகாத குத்திரனை
யாளாக நற்கருணை புரிவாயே

வேதாளமுட்ட வெழு
பாதாளமுட்ட வெழு
மேலோகமுட்ட வொரு நிரையாக

---

* [illegible]ர்சதன விநாயகர் ஸ்ரீ காயாரோகணேஸ்வர ராலய [illegible] புரிந்து ஆண்டிரக்ஷித்துவந்தவர். இ[illegible] ந்நசையில் அக்கற்றூண் பிரிக்கப்பட்ட [illegible]த்துத் தானிருந்தவிடத்தைவிட்டுப் பழனியாண்டவர் சந்நிதிப் பக்கத்தில் விளங்கும் இவ்விநாயகக்கடவுளுக்குத் தான் கற்றூணிலாடிய ஐங்கரனென்று சொல்லப்படுகிறது.

வேதாங்஦றுத்து படை
சூர்மாளவிட்ட கையில்
வேலாயுதப் ப்ரபுட — மறைதேடும்

நாதா சிவப்பொழுகு
பாதா பொருப்பிலுறை
ஞானு நடத்து மொரு — மயில்வீரா

நாராயணற் கரிய
காரோணருக் கினிய
நாகாபுரிக்கு ளமர் — முருகோனே.

---

4. தானத்தனதனந்த தானத்தனதனந்த
தானத்தனதனந்த தானத்தனதனந்த — தனதான

ஆகச்சிறுகுடம்பை மீதிற்குடியிருந்த
வார்புட்குலமிருந்த — வியல்பாகு

மாவிக்குடலிருந்த நேசத்தையுமறிந்து
மாகத்தினைவிரும்பி — யலைவேனோ

மாகப்புயல்பொழிந்த நீரிற் பயிர்தழைந்த
வாறிற்கருணைதந்து — துயர்தீராய்

மாறிப்பிறவியென்ற வேலைப்புணைநிகர்ந்த
வாசக்கமலமென்ற — வடிதாராய்

மோகக்குறமடந்தைமார்பிற் களபகொங்கை
மோதப்புளகரும்பு — புயவீரா

மோனத்துடனிருந் தருஞானக்கலைவிரும்பி
மூவர்க்கருள் புரிந்த — குமரேசா

நாகக்குலமெழுந்து பாயக்கதலிசம்பு
நாவற்கனிகிழிந்த ரசமோடி

நாடிப்புகழ் நிறைந்த சாலித்திரள்விளைந்த
நாகைப்பதியில்வந்த முருகோனே.

---

5. தானனத் தானதாந்த
தானனத் தானதாந்த
தானனத் தானதாந்த — தனதான.

கார்முகத்தோடுசேர்ந்து போர்முகத்தேதொடுபாய்ந்து
காதுமட்டோடிநீண்ட விழியாலே

காமுகர்க்காசைதூண்டி யாடகக்கூலிவேண்டு
காரியத்தாலும் வாஞ்சை மிகவாகி

ஓர்சுருட்பாதிநீந்து பூண்முலைக்கோடுதோய்ந்து
வேலையிற்போகம் நீந்த வனுராகம்

மேவிளைத்தோகைதோன்ற ஏறவிட்டேணிவாங்கும்
வேசையர்க்காசைபூண்டு மெலிவேனோ

சூருடற்பாதிகீன்று பாதியைத்தோகைநீண்ட
சூழ்கொடிப்பாதியாண்ட வடிவேலா

சோலைமுத்தேசுபாங்க னேமலைப்பாவையீன்ற
தூயபொற் றோள்முன்னோன்கு பெறுசேயா.

நாரணித்தேவிகாய்ந்த வேளையெப்போதும்வாய்ந்த
நான்மறைத்தேவர்காஞ்சி புரிவாசா

நாதர்சொற்பாலர் வாய்ந்த பாடலைக்கூறுசேந்த
ஞைகையெப்போதும் வாழ்ந்த முருகோனே.

6. தனதான தத்தன
தனதான தத்தன
தனதான தத்தன — தனதான.

அடிமோனை முற்றெதுகை
தொடைபாவிகற்பமிசை
யசைசீரெழுத்துமுறை முறையோடே

யமுதான சொற்சுவையு
மதிலேபொருட்சுவையு
மழகானபத்துமுறை வெளியாதே

வடிவாயிலக்கணமு
மிகவேபழுக்கவயி
ரமுமேயடித்தகள மெனவேதான்

மழைமாரியொப்பவெகு
தமிழ்மாரியைப்பொழியு
வரமேதரக் கருணை புரிவாயே

முடியேரகத்தினொடு
தலமாறிடத்தும்வட
மொழியாரணத் தருண கிரிநாதர்

முதுபாவினத்துமுன
தடியாருளத்துமுழு
முதலாகயத்துமுறை வணிகேசா

விடுவான்முகட்டையள
விடுகோபுரச் சிகர
முயராலயத்தி லுறை வடிவேலா

உமையாள் வயிற்றில்முழு
மணியே தமிழ்ப்புகழு
முரகாபுரிக் கதிப முருகோனே.

7. தனன தந்தன தனன தந்தன
தனன தந்தன தனன தந்தன
தனன தந்தன தனன தந்தன — தனதான.

அருமைதந்தருள் பெருமைதந்தருள்
புலமைதந்தருள் நிலைமைதந்தரு
ளழகுதந்தருள் குழவிதந்தரு ளதல்லாதே

யறிவுதந்தருள் பொறுமைதந்தரு
ளிளமைதந்தருள் வளமைதந்தரு
ளரசுதந்தருள் தவசுதந்தரு ளநுகூலா

ஒருமைதந்தருள் மகிமைதந்தரு
ளிருபுயங்களி லகில்வரைந்தவ
ருறவுதந்தரு ளுணர்வுதந்தரு ளெனவேதா

னுரைசெயுந்தொறு மினியதொண்டர்க
ளகமகிழ்ந்திட முகமலர்ந்திட
வுதவுமுன்செயல் விதரணங்களை யறியேனே

தருமசுந்தர வருணபங்கய
வதனமண்டல மிலகுகுண்டல
தருவெனுந்தொடையொடுகடம்பணி யிருதோளா

சமரபுங்கவ விசயசம்பிரம
வமரர்தன்சிறை விடுமசஞ்சல
சரவணந்திகழ் கருணையங்கட லெனும் வீரா

செருமுகந்தொறு மசுரர்தங்கிளை
மடியவென்றவ விமையவம்பிகை
சிவனிடம்பெறு கௌரிசுந்தரி தருபாலா

சிகரையம்பதி தணிகையம்பதி
மயிலையம்பதி கதிரையம்பதி
திருவிளங்கிய வுரகையம்பதி முருகோனே.

8. தனனத் தனத்தன
தனனத் தனதத்தன
தனனத் தனத்தன — தனதான.

கடலிற்கவிழ்த்த கலமே
விழலுக்கிறைத்த புனல்
கயிற்றவிழ்த்துவிடு பாலாகும்

கனவிற்சுகித்த சுகம்
நதியிற்கரைத்த புளி
கவியிற்புதைத்த பொரு ளாகியே

மடவிக்கெறித்த நில
விலவைக்குறித்த கிளி
யழலிற்கதிர்க்கிரண மெனவேதா

னறிவைக்கழித் திருகைப்
பதரைப்புடைத்து மெலி
யவலக்கருத்தையும் வகைகாணேன்

விடலைத்திருக்குமர
வசுரப்படைத்தலைவர்
விபுதர்க்குலத்தரென வருமாறி

வெளியிற்புறப்படுவர்
விழியைச் சிமிட்டுகிற
விநயக்குறிப்பிதென வுணர்வாகி

யுடலைப்பிளக்க வவர்
குடலைச்சரித்தவர்க
ளுயிரைப்பறித்து வரு கதிர்வேலா

வுமைபெற்றெடுத்த சர
வணசிற்குணப் ப்ரபுட்
வுரகைத்தலத்தில்வரு முருகோனே.

9. தானதன தாத்ததான
தானதன தாத்ததான
தானதன தாத்ததான—தனதான.

வாசமலர்சூட்டுவார்கள் வாள்விழிமை தீட்டுவார்கள்
மார்பின் முலைகாட்டுவார்க ளதனாலே

வாலிபரைவாட்டுவார்கள் வேள்சலசமூட்டுவார்கள்
வாசனைகள் கூட்டுவார்க ளணிவார்க

ளாசையிதமூட்டுவார்கள் வாளுகிரைநாட்டுவார்க
ளானகுரனீட்டுவார்க ளொருகோடி

யாகவிதியீட்டுவார்கள் பாவமிகுகூத்திமார்க
ளாசையறநீக்கியேயு னருள்தாராய்

ஈசர்குருமூர்த்திநாதா வானுலகோர்போற்றுபாதா
வேழுலகும் வாழ்த்துநீதா மயிலேறி

யேயுதவுகாக்ஷியாளா நாலுமறையேத்துசேயா
வேதமுறுமாற்றலார்க ளதிசூரர்

நாசமறவீழ்த்துவேலா மால்வரையை யீர்த்தவேலா
நாகவிகம்வாய்த்தவேலா வடிவேலா

ஞானநிலைதோற்றும்வேலா தேவர்சிறைமீட்டவேலா
நாகைவருகார்த்திகேயா முருகோனே.

---

10. தனத்தானதானதன
தனத்தானதானதன
தனத்தானதானதன—தனதான.

அறப்பாலைமேயுதவு
பொருட்பாலையேயுதவி
யருட்பாலிலேமனது நுழையாம

லருட்பார்வைவேணுமது
சுருக்காணிபோலுமவை
யருக்காணியாகுமது — தரவேணு

மறுப்பாடிலாதசமி
ழுறைத்தாலுமோவதனை
வளர்ப்பார்களாருமிலை — யதனாலே

மடிப்பாகுமேதகும
மினிதத்தேவரீரைவிட
வகைக்காரரோரொருவர் — பரம்நீயே

குறப்பாவையார்மனது
கயப்பாவையாமனது
குறிப்பாகநாடுகுரு — பரசேவற்

கொடிக்காரனேகனக
முடிக்காரனேவிபுதர்
குறிக்காரனேயசுரர் — குலகாலா

கறுப்பானமால்மருக
சிவப்பானமேனியினில்
வெளுப்பானநீறுபுனை — கதிர்வேலா

கழைக்காடுமேகதலி
வளைக்காடுமேமருவு
கடைக்கானல்வேலிவரு — முருகோனே.

---

11. தானனதாத்ததன
தானனதாத்ததன
தானனதாத்ததன — தனதான

வீணனவாழ்க்கையதிலேயூறுமுத்தையது
வேணுமுயகாற்றமதி — லுயிர்தானே.

குளிர்ந்தகண் பனி ரெணடும் விளங்கு —
சிலம்புதண்டை சதங்கையுடன் சூழ
குமென்றகொரந்தரவிந்த பதங்களு மறவேனே

சுரும்பனந்தமெதிர்ந்து புறஞ்செல
வடந்தடர்ந்து நடந்துநெருங்குழை
தொடர்ந்துநின்று திரும்பியருங்குமிழ் மிசையோடி

துலங்குவமபுருவங்க ளெதிர்ந் தமு
துடன்பொருந்தி விடங்கள்பயின்றெதிர
சுழன்றுருண்டு சிவந்துகுடங்கையில் நெடிதாகிக்

கரும்பெனுஞ் சிலையம்புசளேந்தையு
முனிந்தரன்கையில் வந்துகுரங்கவி
கடம்புரிந்து புரங்களடங்கலு மெரியாலே

கலங்கவென்றுல கங்கடழைநதிட
விரங்குமன்பு சுரந்துபொழிந்திடு
கருந்தடங்கண்மடந்தை தருந்திரு முருகோனே.

---

13. தானன தானனன
தானன தானனன
தானன தானனன - தனதான.

மாதாபிதாவினுட ஞசானும்நீ துணைவர்
மாமானும் நீ பரம சிவனுகி

வாழ்வானும்நீ விபுதர்கோமானும்நீ கரிய
மாயோனும்நீ யுசவு கொடையாலே

தாதாவும்நீ மலாவிதாதாவும்நீ வினைகள்
சார்வானும்நீ யுடலி னுயிர்போலே

சார்வானும்நீ மருவியாள்வானும்நீ புனது
தாளாண்மைதானறிய வெளிதாமோ

ஆதாரபூதசதுர் வேதா விநோதகரு
ணாகாரதேவர்பர குருநாதா

வாசானுமாகமமறை வாசாம கோசரநி
ராகாரகிரன்முது தமிழேறு

காதாவிராவிமலை வேலா வலாரி யுப
காரா முராரிதிரு மருகோனே

காலாயுதாசமர கோலாகலாவிமல
காரோணநாதர்தரு முருகோனே.

---

14 தானன தானத் தந்த தானன
தானன தானத் தந்த தானன
தானன தானத் தந்த தானன—தனதான.

மாதவிடாயைத் தந்ததா லரை
மீதினிலேகுத் துண்டவாயதன்
வாசலையோ துர்க்கந்தமாகிய குழியாலே

மாபுரையோடிச் செம்புணாய் மறை
நீள்சலதாரைக் கும்பியானதை
மானடியே யொப்பொன்ற பாதக மொழிவேனோ

மோதிய மார்பிற் பந்துநேர் பரு
வானதையானைக் கொம்புபோலவு
மூடியபூளைக் கண்களானதை யயில்போலு

மூரலையிய முத்தென்று வாயினி
லூழலையே கற்கண்டு போலவு
மோகவிடாயைக் கொண்டதீவினை யகலாதோ

நாதவிநோதப் பண்டிதா குற
மாதுதெய்வானைக் கிங்கிதா சிவ
ஞானசொரூபச் சுந்தரா மலைக் கிழவோனே

நான்மறைநீதிக சந்தனே யுமை
யாளனுகூலக் கந்தனே யுனை
நாடியபேருக் கன்பனே — யறுமுகவோனே

ஆதவன்வாயிற் றந்தமே விழ
மோதியகோபத் தெம்பிரா னடி
யார்வினைபூளைப் பஞ்சுபோல் — முடிகியதேவா

யாரணிகாமத் தம்பிசாபதி
காலனையே யுத்தண்டமாயய்
வாதிபுராணத் தம்பிரானருள் — முருகோனே.

15. தத்தனத தானதன
தத்தனத தானதன
தத்தனத் தானதன — தனதான.

புற்புதப் பாழுடலெடுத் தெடுத் தாவதென்
புத்தர்கைப் பேதெனவு — மெலவேனோ

பொற்பெழுத் தாறுசித முச்சரிப்பார்க ளிரு
பொற்பதத் தூளியுடல் — புனைவேனோ

அற்பரைப்பாடி யவர்பக்கலிற் போயலைய
வத்தனைக்காளல வென்னிடர் — தீர

யக்கிரமக்காலனுட னுத்தரிப்பார்க ளவ
ரச்சமப்போதகல — வருவாயே

கற்பகக்காவிபுதர் சொர்க்கம்வீட் டோடவிடு
கைச்சிலைச்சூர்முடுகு — கதிர்வேலா

கட்செவிப்பூணழக ரட்டதிக்காடையினர்
கைத்தலச்சூலதரர் — சிவயோக

ருற்பலக்கோலவிழி யற்புதத்தேவி யமு
தொத்தகற்பூரமொழி — யுமைபாக

ருச்சிதப்பீடமுழு சித்திரத்தேரில்வரு
முத்தமத் தியாகர்தரு — முருகோனே.

16. தனன தனந்தத் தானனா தன
தனன தனந்தத் தானனா தன
தனன தனந்தத் தானனா தன -- தன தான.

மொழிகள்சிணுங்கிப் பேசுவார் புழு
கொழுக விரம்பப் பூசுவார் மயிர்
முடியை யடங்கக் கோதுவார் மலர்மாலை

முருகுகொழுந்தைச் சூடுவார் மிட
றிசையை முழங்கிப்பாடுவார் பகல்
முழுது முடம்பைப் பேணுவா ரிளைஞர்கள்மீதே

விழியிணை யம்பைப் போடுவா ரிரு
முலைகள் குலுங்கக கூடுவார் நிதி
மிகவும் விரும்பித் தேடுவார் கணி கையர்மீதே

விரகமெனும் பித்தேறியே விழு
நரகி லழுந்திப் போய்விடா வகை
விரைசெய்சதங்கைப் பாத தாமரை தரவேணும்

வழுதியுடம்பிற் கூனும் நீடிய
சுரமுமடங்கிப் போகவே பொடி
யணையுமருந்திற் றீரவே யருள் புரிபோதில்

வழுவுசமண்கெட் டோடவே
கழுவிலுடன்பட் டேறவே யவர்
மரபுநடுங்கச் சீறு தேசிக வடிவோனே

அழிவில்குரங்கைச் சேனையா யெதிர்
நிறுவி யிலங்கைப் பாவிராவண
னவனைமழுங்கச் சாடினோன் மகிழ் மருகோனே

அரியகடம்பைப் பூணுமார்பக
குருபரசெந்திற் றேவநாயக
வழக விடங்கத் தியாகனார் தரு முருகோனே.

கன. தான தானன தானனா தன
தான தானன தானனா தன
தான தானன தானனா தன—தன தான

ஆதிநாள்வினை தீராதோ மிடி
தீரநாளினம் வாராதோ வறி
யாமையா மதி போகாதோ மதுரிதமாக

வாசுபாலெவ தோராதோ மொழி
வாய்மைகாதினி லேறுதோ வடி
யார்கள்போ லெனை நாடாதோ திருவுளமேதோ

நீதிலாநெறி சேராதோ வொரு
காலனார்படை தோராதோ படி
சேதியானது பாராதோவடி வழகான

சேர்வைதானினி நேராதோ சிவ
ஞானபோதனை தாராதோ வடி
சேரவேயருள் கூராதோ செய லறியேனே

பூதசேனைகள் கோடாகோடிகள்
தானைகாவலர் மோடாமோடிகள்
போதவே புடை சூழ்சேனாபதி யெனும்வீர

பூரணாகும ரேசா கேகய
வாகனாகுற மானார் மோகன
பூஷணாகுல தேவாதேவர்கள் பெருமானே

காதியேபுர மாறாய் நீறெழ
வீசுமூரலினாலே போர்புரி
காரணாதியர் காயாரோகணர் தருபாலா

காமனார்படைவீடே நேர்பொழில்
மாடமாளிகை தானே சூழ்வுறு
கானல்வேலியின் வாழ்வே யேரக முருகோனே

௧அ. தனதான தான தன
தனதான தான தன
தனதான தான தன — தன தான

மகராஜராவர் தன
பதிராஜராவர் சிலை
மதராஜராவர் புவிமுழுதாளு

மனுராஜராவர் கன
துரைராஜராவர் தமிழ்
வலராஜராவர்சமர் பெறவேகார்

முகராஜராவர் மத
கரிராஜராவர் மறை
முனிராஜராவ ருரைபிசகாத

மொழிராஜராவ ரிரு
விழிராஜ பார்வையினுன்
முதுராஜபார்வை பெறி னரிதாமோ

நகராஜனுர் மருக
புரநாசகோப திரு
நடராஜனுர் கனக சபைராஜர்

நதிராஜவேணியினர்
தவராஜனே தவள
நாராஜஜீயமுளரி யினராஜர்

செகராஜசாலி சுக
மகராஜராஜர் தச
ரதராஜர்நீள்கமல முனிராஜர்

தினராஜ பானுவொடு
பணிராஜர் பூசைபுரி
சிவராஜதானி வரு முருகோனே.

---

௧௧. தாத்தன தான தனத்தன தானன
தாத்தன தான தனத்தன தானன
தாத்தன தான தனத்தன தானன · தனதான

தோற்றசைமூளை யிரத்தமெலாமொரு
காத்திரமான துருத்தியிலே வரு
சூத்திரதாரி யெனப்புகுவாய் புகு மியல்பாலே

சூட்சுமமாக வசைத்திடுவாய வெகு
மூர்ச்சையுலாவி வயசசொலுவாய் மிளிர்
தோற்றமுமாகி யொடுக்கமு மாகுவை யதல்லாதே

யாத்துமம வேறு பிரித்திடுவா யதில்
வேற்றுமைபோல வொளித்திடுவாய் பிணை
வாக்கையைநாற வெடுத்தெரிவா யிது தொழிலாக

வாக்கினைகோலி நடத்திடுவாய் புழு
வேட்டுவனூடி யெடுத்ததுபோல் வினை
யாற்பிறவாதுச துட்டயவீடினி யருள்வாயே

எற்றினிலேறு சிவப்பெருமா ளறு
சாத்திரநாலு மறைப்பெருமாள் மழு
வேற்றிடுசூல தரப்பெருமா ளழ குடனாடு

மேற்கயிலாய வரைப்பெருமான் விரை
யாத்தியினீழ விடப்பெருமா னுல
கேத்தியதேவர் துரைப்பெருமாள் பகிரதிவீறு

கீற்றுநிலாமகு டப்பெருமாள் திரு
நீற்றொளிவீசு நுதற்பெருமாள் தமிழ்
கேட்டருள்கூரும் வகைப்பெருமாள் புர மதனாலே

கீர்த்திகொள்மூரல் விழிப்பெருமா ளிரு
நாற்றிசையாடை யுடைப்பெருமா னுயர்
கேத்திரராஜ புரப்பெருமா ளருள் முருகோனே.

---

20. தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத் தனதத் தனதத்—தனதான.

பொறுமைத்திறமற் றறமற்றருளற் றுணர்வைச்
செவியிற் பறியப் புகவிட் டறிவுக்
கிடமற் றிருளிற் புகுவேனை

புடவிக் குடிமைக் கடிமைப் படுமைக்
கடமைக் கடிபட் டுழலத் தலையிற்
பொறியப்படியப் படிகட்டளையிட் டிடலாலே

பிறவிக்கடலிற் புணையைத் தலையிற்
சிலையெச்சரணிற் றலைகைக் கொளுவிப்
பிடிபட் டிடிபட் டெரப்பணியத் தடுமாறி

பிணியிற்றளர்வுற் றிரும்ிப் பகற்சொற்
குழறிக் கழறித் தடியிற் றிரியப்
பலனற்றவனுக் கினிநற் கதியைத் தரவேணும்

கறுவிச்சுரசத் துருவைச் சமரிற்
கழுகுக்கிரையிட் டமரக் குழுவைக்
கடுகிக்கொடுமைச் சிறைவிட்டிசைபெற் றிடுவோனே

கமலத்தயனைக் குடிலைப்பொருளுக்
குரைசெப்பென வப்பொழுதிற் குழறக்
கடினத்தொடுகுட் டியகைத்தலவிற் பனவேளே

சிறுகட்கரடத் திரிகட் டிவளக்
கவளப்பவளத் தவளச்சிவனுக்
கொருபுத்திரனுக் கருமைத் துணைவோனே

திகழ்பொற்பழனிக் கிரியிற் றணிகைக்
கிரியிற்கதிரைப் பதியிற்பரவைத்
திரைசுற் றுரகைப் பதியிற் குமரப் பெருமானே.

21. தானான தந்த தானான தந்த
தானான தந்த—தனதான.

சாணாபண்டி தூராதகும்பி
தானேவெதும்பு பசியாலே

தாளாண்மைகுன்றி வாளாவிருந்து
தாதாவுமின்றி யலேவேனே

வாணாளும்விண்டு போனாலுடம்பை
யாகூசமென்பள் பெறுதாயு

மானாலுமிந்திர மானாலவிஞ்சை
யாகாதுசெம்பொ னடிதாராய்

தானாமென்பர் நானாவிதங்க
டானேன்தெரிந்து முறையோடே

சாலோகமிஞ்சி சாமீபமிஞ்சு
சாரூபமந்த மருள்வோனே

காணாதுகண்ட தேபோல்மகிழ்ந்து
காலால்நடந்து மொழிதூதர்

காரோணர்தந்த பாலாசிவந்த
காயாமெய்கண்ட முருகோனே.

---

22. தத்த தத்த தனதன தானன தந்தன
தத்த தத்த தனதன தானன தந்தன
தத்த தத்த தனதன தானன தந்தன—தனதான.

அஷ்டமத்தி லுறுஞ்சனி கேதுவும் ஐந்தினில்
வக்கரித்து வரும்புத ஞாதப னொன்றினில்
அத்தமித்த புகரொடுகூடினும் வெண்சுட ரிருநாலாம்

அத்தலைத்தில் மருவினும ராஜன்மகிழ்ந் தொரு
பத்திடத்தி லுரையினும நாவினில் வெமபணி
யச்சமுற்ற குசனொடுகூடினு மென்செய்வ ரவராலே

தொட்டசைப்ப தரிதரிதா றெனுமந்திர
முச்சரிக்கி னிடர்கெடு வேதனை வெமபிணி [தே
சோறபனதை நகர்படவோடி மறைந்திடு மதல்லா

சொர்க்கமிக்க பதவிகளோ வெதிர் வநதிடு
மப்படிக்கு னருள்பெறவேணு மெனுமபடி [ர்வாய்
சொற்புகழ்ச்சி பெருதமிழ் பாடவிரும்பியு னருள்கூ

மட்டுமொய்த்த களபமும் நீபமும வஞ்சியு
வெட்சிமிகக தொடையலு மவாகை கரந்தையு
மற்புயத்தி லணிகரு ணாகர சுந்தர வடிவோனே

வச்சிரகைமகபதியாகிய விசித்திர
னிசைவைத்த மணமருகா குறமங்கைதன்
வட்டமிட்ட குவிமுலைபாய வழுந்திய புயவீரா

கட்டினிற்கு மதகரி சேனைகள் வெம்பரி
கொட்டமிட்டு வருமசு ரேசனை வென்றிடு
கைததலத்தி லமரயி லாயுதபுங்கவ குமரேசா

கற்பகத்தை யுதவிய தாதையர் சங்கரர்
நிர்த்தமிட்ட சபையினர் நாகை விளங்கிய
கட்டியப்பரமிர்த கடேசுரர் தந்தருள் முருகோனே.

---

௨௯. தனதனந் தானதன தனதனம் தானதன
தனதனம் தானதன — தனதான

முருகுவண்டாட நறை விரிகடம்பாட வறு
முகமலர்ந்தாட நகை நிலவாட

மொழிகனிந்தாட வருள் விழிசுரந்தாட மணி
முடியசைந்தாட வணி புனைதோளா

வரைதிரண்டாட விடு குழைபுரண்டாடவரை
வடமசைந்தாட வடி யிணையான

மலர்சிறந்தாட வதி லணிசிலம்பாட வொரு
மயில்விரைந்தாட வெதிர் வரவேணும்

கிரியிலங்காபுரியில நிருதர்சென்றாளருட
சிரசுபந்தாடு மரி மருகோனே

சிவனிடம்பாதிபெறு கவுரிசந்தானகுல
திலகசங்கிராம சிவ குருநாதா

அருணசிங்காரஜெய விருதலங்காரபொரு
மசுரர்சங்காரதிற லபிராமா

வமரர்கொண்டாடவரு விமலகங்காளரெனு
மமரநந்தீசர்தரு முருகோனே.

உச. தான தந்தன தானனா தன
தான தந்தன தானனா தன
தான தந்தன தானனா தன—தனதான

பூவுடன் படும் நார்போலே நலப்
பாலுடன்படு நீர்போலே யணி
பூணுடன்படு நூல்போலே பதர் மிகுசாலி

போலுடன்படு நேர்போலே யடி
யாருடன்படு வேனோ நீயருள்
போதரும்புரி வாயோ யாதென வறியேனே

யாவியொன்றுடல் கோடி கோடி
யநேகமுண்டது தானேநீசெய்வ
தாகிலுன்கரம் நோவாதோ மல பரிபாக

மானசந்தியும் வாராதோ வினை
யோரிரண் டிணையாகாதோ வெனை
யாளவுந்திரம் போதாதோ வினி முடியாதோ

சேவலங்கொடி யானே யோக
மாவினன்குடி யானே வானுள
தேவர்தம்பெருமானே தேசிக — வடிவோனே

சேயகந்த சுவாமியான
படீர குங்குமமார்பா ஞானவி
சேட மந்திரசொரூபா யாமளை — தருபாலா

காவிலங்கையிற் வேலாலே யினி
தாய்வரைந்திடு போதா தேடிய
நாவலன்றுதிபேசா வூமைய — னலவோதான்

நாணிலம்புகழ் சோணாடா புல
வோர்நெருங்கிய சேணாடாதிரு
நாகையம்பதி வாழ்வே மாமயில் — முருகோனே,

---

25. தனதான தானதன தனதான தானதன
தனதான தானதன—தனதான.

தலைமீதிலொடுசேரு குவர்லாலரொடெனது
தலையோடு வேமளவு — மகலாதே

தயவோடு சேர்வனென மிகவாணைகூறியவர்
தமைமேவியே நிதிஙக — வசமாக

வலைவீசியேபிறகு தலையோடு தீயிலிடும்
மதிகூர்மை வேசியர்க — ளுறவாமோ

மயில்வாகனு முடிவில்விடுகாலபாச முறில்
மறைநாள நூலெனவு — மருள்பாராய்

அலையாழியேழுமலர் பொழிலாதியேழுமுடி
யசலாதியேழு மணி — முகிலேழு

தலமாதியேழு முயருலகாதி யேழுநிலை

யலையாமலாலம் நுகர் — கனிவாயர்

கலைமாதுகேள்வனிகர் சதுர்வேத ராஜமுனி
கனமானபூஜை புரி — யிருபாதர்

கடல்நாகைவாழவரு சிவகாமி பாகமுறு
கயிலாயநாதர்தரு — முருகோனே.

---

26. தனதத்த தானதன
தனதத்த தானதன
தனதத்த தானதன — தனதான.

ஆளவட்டமாய் வயது
லொடலொட்டையாகி விடி
லெழில்கெட்டு மேனிமுதிர் — கிழமாகி

யெழுபுத்தி யோசனையு
மழுமட்டையாய் விழிக
ளெதிரிட்ட பேருருவ — மறியாதே

தளர்வட்டமா யறிவு
முழுநட்டமா யுணர்வு
சலவட்டமாய் மொழிகள் — தடுமாறி

தலைநட்டுவீழ் துயிலி
னெறுபட்டு நூலிழைகள்
தலைகெட்டதாமெனவு — மலைவேனோ

களபப் படீரமணி
புளகப் படாமுலைகள்
கனமெத்தமாகியிடை — நலிவான

கடினத்தை வார்தழையி
னெறுசெப்பமோவாடவரு
கருணைப்பிரதாபவிழி — மகமாயி

நளினத் திவாணிரதி
சகிர்த்த மேபரவு
நடமிட்ட பாதவடி வுடையாளாம்

நவசித்திர ரூபமிகு
சிவசத்தி பால்மருவு
நடுவுத்தலேசர் தரு முருகோனே.

27. தனதன தானன தனதன தானன
தனதன தானன—தன தான.

ஒருபொருளா யதி லிருவகையா யதி
லுருவமுமா யதி லருவாகி

யுணர்வரிதா யதி லறிவுளதா யதி
லுடல்பொருளாவி கொ ளுபதேசா

குருவடிவா யெனே யடிமையதா யுள
குலதெய்வ மாயறு முகமாகி

குருபரனாகிய கருணைமனோலய
குணவனு பூதியை யடைவேனோ

தருமதயாபர விபுதர்ஜெனாதர
சகலகுணாகர வுபகாரா

சமரபுயாசல திமரதிவாகர
சருவவியாபக குருநாதா

அருமறைவேதனு மணிமுடிமாயனு
மடிமுடிதேடிய மகதேவ

ரரகரவீசுர சிவசிவ நாகையி
லழகியனார் தரு முருகோனே.

28. தத்தனத்த தத்தனத்த
தத்தனத்த தத்தனத்த
தத்தனத்த தத்தனத்த — தனதான.

வட்டமிட் டடிக் கனைத்து
வெற்பெனப் புடைத்தெதிர்த்து
மத்தகப் பொருப்பையொத்த முலைமீதே

வச்சிரப் பதக்கமிட்டு
நித்திலக் கழுக்கனிட்டு
வட்டமிட்டு கட்டிகட்டி யழகான

கட்டில்மெத்தை யிற்படுத்து
மட்டறப் பொருட்பறித்து
கட்குடிப் பரத்தையர்க்கு மயலாகிக்

கப்பலைக்கடற் கவிழ்த்த
சோகதற்ப னுக்குமிக்க
கட்டளைப் பிரசித்திமுத்தி தரவேணும்

கொட்டமிட்ட சத்துருக்கள்
கொக்கரித் திரத்தகத்தி
கொப்பளிக்க வெட்டியிட்ட சமர்வேலா

குக்குடக்கொடிப் பிரவுத்த
வற்புதக்குறத்தி செப்பு
கொச்சையிற் பிரியத்தைவைத்த மணவாளா

அட்டதிக் குத்தத கர்த்தர்
தக்கனைக் கறுத்தமத்த
ருக்கனைப் பலத்தகர்த்து மதவேளை

பக்கமிட்டெரித்த சித்தர்
வெற்பிடத் திருக்கைபெற்ற
வத்தர்சட்டை யப்பர்பெற்ற குருகோனே.

29. தானதசா னனதன
தானதசா னனதன
தானதசா னனதன — தனதான.

ஆலைக்காமா விஜய
வாகைத்தாமா மெனவு
தாரசசோமா மதியி ளகேசா

வாண்மைத தீரா வதிக
வாள்விற்போரார் சமரி
லாடற்சூரா மெனவு மறியாதே

ஓலைப்பாழா மெழுது
பாடற்கேளாத முன
மோடிப்போய மூலையினில் மறைவாகும்

லோபப்பா ழானருட
பேரைப்பாடாமலவ
ரூரைப்பாடமலரு டரவேணு

மாலைப்போதா யுலகை
மூடசிராழி தனை
வானதந்தராளி மிசை விடுமாயன்

மாயப்போராக வொரு
பேடிக்காளாகி யவன்
வாசிதசேதருரு மரி மருகோனே

வேலைச்சூர்மாள வினை
யாடிபபோர் வாகைபுனை
வேலப்பா தேவர்சிறை விடும் நாதா

வேரிப்பூவா லமரர்
பூசித்தாராதனைசெய்
மேலைக் காரோணர்தரு முருகோனே.

---

30. தானதான தானதான
தானதான தானதான
தானதான தானதான—தனதான.

காலைமாலை நீரின்மூழ்கு
நானபான நேதிபூசை
காதல்கூர் தியானமோன மிசையான

காதை யோதனுமமாய்
விடாதுபேசல் கேள்வியான
காமர்கோயின் மாடுசூழ லழகான

வாலபானு கோடிகோடி
யேகராசி ரூபமோடு
மாசிலாத பீடமீது கொலுவாகி

வாழும்ராஜ தானியோக
நாகரீக பாதசேவை
மாறிலாது காணநாளு மருள்வாயே

ஆலகால பானனார்
கபாலசூல பாணிநாக
மாறுசோம னரின்மாலை யணிவேணி

யாதிநீதி சோதிபேதி
யாததேவர் மூவரோது
மாசிலாத பாடல்சூடு மமரேசர்

நாலுவேத நாதகீத
ராசைநாலு தூசரீசர்
நாலுதோளு நாலுவாயு முளதாதை

நாரிபாகர் காலகாலர்
நாகராஜர் பூசையான
நாகநாத னார்குமார முருகோனே.

31. தனத்தா தனதன தனத்தா தனதன
தனத்தா தனதன — தனதான.

இடிப்பார்படல்கொடு பிடிப்பாருறுபுலி
யெனப்பாயும்வித மதனாலே

யிளைத்தேனுடல்பர தவித்தேனரகர
வினித்தா னிதுபட முடியாதே

மிடிப்பாதகவிரு ளறுத்தே யிரணிய
விளக்காகிய வொளி பெறவேதான்

விருப்பாயகமகிழ் மலர்த்தாமரையெனும்
விழிப்பார்வையி னருள் புரிவாயே

கொடிக்கேகிகரிடை தனத்தாலயர்வுறு
குறக்கோகில மயில் மணவாளா

கொடிச்சேவலையுள சமர்த்தா வசுரர்கள்
குடிக்கே மறலியை நிகர்வேலா

அடிக்காயிரநிதி படிக்காசுதவியு
மருட்பாவலர்தமிழ் புனை தேக

ரழற்போல்விரிசடை முடித்தோ ருரகையி
லகத்தீசுரர் தரு முருகோனே.

32. தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன — தனதான.

ஐந்தொழிலறிந்துபுரி யைங்கடவுடங்களிலை
யஞ்சுவகை மந்திரமு மறியேனே

யைம்பொழுதுநின்றநிலை யைங்குரவனென்பதிலை
யைந்திணைகடந்தநிலை மகிழ்பூத

